பாமலர் - அ அன்பு மலர் ௬௬

# அன்புறுதி

[பக்தி வைராக்கியப் பாடல்கள்]



சுவாமி சுத்தானந்த பாரதியார்
இயற்றியது



அன்பு நிலயம்
இராமச்சந்திரபுரம், திருச்சி ஜில்லா

பாமலர் அ - அன்பு மலர் ௬௬



# அன்புறுதி

[பக்தி வைராக்கியப் பாடல்கள்]





**சுவாமி சுத்தானந்த பாரதியார்**

இயற்றியது



**அன்பு நிலயம்**

இராமச்சந்திரபுரம், திருச்சி ஜில்லா

**1940**

 Censure No. 55

[விலை { அணா 4 / Cts. 20

# பதிப்புரை

எமது நிலயத்தின் முப்பத்தியாறும் அன்பு மலரை (எட்டாவது பாமலராக, வெளியிட்டு பரம்பொருளின் மலரடியில் வைத்து வணங்குகிறோம்.

“அன்புறுதி” என்னும் இப்பாமலர்கள் அடிகள் கடவுளார்வத்தினின்று மலர்ந்தனை. அடிகள் வாழ்க்கை கடவுட்கலப்பில், ஊன்றி வளர்ந்தது. அவ்வப்போது அடிகள் தமது ஆர்வங்களைக் கடவுளிடமே பாடி முறையிட்டு வந்தார். அவ்வாறு அவர் பாடிய பாமாலைகள் பல. அவற்றில் சில இந்நூலில் தொகுக்கப் பெற்றுள்ளன. நூலின் அருமையை, அதிலுள்ள அருளாவேசத்தை, படிப்பவர் எளிதில் அறிவார்கள். இந்நூல் கடவுளன்பை உறுதியாக உள்ளத்தில் நாட்ட வல்லது. இந்நூலை ஆர்வமுடன் வெளியிட்டுதவிய கோனாபட்டு அன்பர் ராமசாமி வேளார் மகன் சிதம்பர வேளார் அவர்களுக்கு எமது அன்புள்ள நன்றியை அறிவிக்கிறோம். இன்னார் நல்ல தமிழபிமானி; அடக்கமாக அருட்பணியாற்றும் எமது நிலய அன்பர். இத்தகைய அன்பர் துணையாலும் இறைவனருளாலும் எமது அன்புப்பணி வெற்றிபெறுக!

1-11-'40. அன்பு நிலயத்தார்.

## பொருளடக்கம்

உ

# அன்புறுதி



## காப்பு

தெள்ளியருள் ளத்தே திருவார் நடம்புரியுங்
கள்ளார் மலரடிக்கே கைகுவித்துத்—துள்ளு
மனமடக்கி யன்பு மலர்தூவு மின்பந்
தினமருள்க சுத்த சிவம்.

## க. சிவமயம்

விள்ளரிய சுகானந்த வெள்ளங் தன்னில்
விளைந்தபரங் கனியேயென் விருப்பை நாளும்
கொள்ளைகொளும் அருட்சோதிக் குன்றே, தன்னைக்
கொடுத்தடியார்குறைதீர்க்குந் துரையே, அன்பர்
உள்ளகத்தி லோங்காரச் சிலம் பொலிக்க
ஓங்குநடம் புரிகின்ற சிவமே, யுன்னைத்
தெள்ளினிய செந்தமிழால் வழிபட் டுய்யச்
சிறியேனுக் கருள்புரிவாய் பெரிய தேவே! க

# அன்புறுதி.

மண்ணீர்காற் றனல்வானச் சுடர்க ளாவாய்;
மன்னுயிருக் குயிரான மன்ன னாவாய்;
கண்ணாவாய்; கண்காணுக் காட்சி யாவாய்;
கதியாவாய்; கதிக்கேற்ற மதியு மாவாய் ;
பெண்ணாவாய் ஆணாவாய்; பெண்ணு ணாவாய்;
பெயர்வடிவப் பேதமிலாப் பெரிய னாவாய்;
விண்ணாவாய் வியன்ஞான விரிவு மாவாய்;
வியக்கின்றேன் உனைவிளம்பத் திகைக்கின்
[றேனே! உ

உருவென்கேன் அருவென்கேன் உண்மையென்பேன்;
உருவருவமென்கேன்சித்தொளியே யென்பேன்,
குருவென்கேன் கோவென்கேன் குணமேயென்கேன்;
கொண்டென்னைக் குறைதீர்க்கும் பரிவேயென்பேன்;
கருவென்கேன் கண்ணென்கேன் கருத்தேயென்கேன்;
கண்கருத்தைக் கடந்தோங்கும் பண்பேயென்பேன்;
திருவென்கேன் செகமென்கேன் அன்பேயென்பேன்;
திருச்சிற்றம் பலமென்னச் செப்பு வேனே! ௩

இவ்வுலகம் உளதென்பர்; இல்லை யென்பார்;
இறைவனளித் தானென்பார்; இயற்கையென்பார்;
வெவ்வியவெங் கனவென்பார்; வெறுமை யென்பார்;
வெறுவாயால் வேதாந்தம் பேசு வார்கள்;
ஒவ்வாத வாதங்கள் உளறி நில்லேன்;
உன்விளையாட் டுலகென்பேன்; உள்ளத்துள்ளே
திவ்வியசித் தொளிவீசுந் தேவே, எல்லாஞ்
சிவமயமென் றிருப்பதலாற் செயலிலேனே! ௪

சிவமயம்

பலபலவாம் சமயங்கள் சாத்தி ரங்கள்,
பலபலவாஞ் சாதிவகுப் புகளின் பான்மை;
பலபலவாந் தேசங்கள் ஆசா ரங்கள்;
பலபலவாங் கொள்கைகள் ஐதீ கங்கள்;
உலகையிவை யெந்நாளும் இரத்த மோடும்
ஓயாத போர்க்களமாய் உலைத்த தென்னே!
கலகமிலா தெல்லாருங் கலந்து வாழக்
கழல்காட்டி யழைக்கின்ற கருணைத் தேவே! ௫

எச்சாதி யானாலும், எவரா னாலும்,
எச்சமய மானாலும் எங்கா னாலும்,
உச்சிமிசைக் கைகூப்பி யுனை வணங்கும்,
உண்மையடி யாரொன்றே குலமென் பார்கள்;
அச்சாதி அச்சமயம் அவருக் காங்கே
ஆர்வமறிந் தன்னைபோ லருளு மப்பா!
அச்சமிலேன் ஐயமிலேன் அயலொன் றெண்ணேன்
அனைத்துநீ யென்றறிவேன் அன்புத் தேவே! ௬



## உ. பரம் பொருளே

மலையினு மாண்பே, வானினும் விரிவே
மழையினுங் கருணையா ரமுதே,
அலைகட லாற்றை யுண்டது போலே
யகப்புறச் சமயங்க ளுண்டு
நிலைபெறு நிறைவே, நேயர்தந் தூய
நெஞ்சுளே வந்துவந் தினிக்குந்
தலைபெறுஞ் சுகமே, மறைகளி னகமே
சதாசிவ மாம்பரம் பொருளே. க

கொங்கலர் மலர்வாய்க் குறுநகை புரிவாய்;
குயில்களி விசையமு தளிப்பாய்;
செங்கதி ராகத் திருவிழி பார்ப்பாய்;
தென்றலாய் வந்தெனை யணைவாய்;
பொங்கவென் னுள்ளம் பூரண மதியாய்ப்
பொலிகுவா யியற்கையைப் போர்த்தே
சங்கை யிலாத சீவராய்த் திகழும்
சதாசிவ மாம்பரம் பொருளே. உ

கண்ணெலா முனது காட்சியே காணும்;
கருத்தெலா முன்னையே கருதும்;
பண்ணெலா முனது பெருமையே பாடும்;
பாரெலா முன்னருள் பரவும்;
விண்ணெலா முனது பொன்னணி யொளிரும்;
வீடெலா முனதுயிர் வளரும்;
தண்ணெலா முனது தண்மையே காணும்
சதாசிவ மாம்பரம் பொருளே. ௩

எச்சம யத்தார் எப்பெயர் வடிவில்
எவ்வகை யன்புசெய் தாலும்,
அச்சம யத்தார்க் கப்பெயர் வடிவில்
அவ்வகை யன்பரு ளன்பே,
துச்சமாம் வகுப்பு வேறுபா டின்றித்
துரியமா முயர்நிலை விளங்கும்
சச்சர வற்ற சமரசச் சுடரே,
சதாசிவ மாம்பரம் பொருளே. ௪

பாரெலா முனது திருவிளை யாடல்;
பலவுயிர்க் குலமுன துடலம்;
சீரெலா முனது திருவரு ளீகை
சித்திகள் யாவுமுன் விளக்கம்;
காரெலா முனது கடலுண்ட கருணை
கதிரெலா முன்விழிக் கனலாம்,
தாரிலே நார்போ லுலகினைத் தாங்கும்
சதாசிவ மாம்பரம் பொருளே. ௫



## ௩. எப்படி யுய்குவேன்?

சிறியனே னுனது நாமமே சொல்லித்
    திரிகின்றேன்; மலரடி யல்லாற்
பிறிதிலே னுனது பேச்சலாற் பேசாப்
    பித்தனேன்; உலகிய லறிவை
யறிகிலேன்; அறிந்தார் தம்மையு மணுகேன்;
    அறிவுன தறிவலால் வேண்டேன்.
இறைவனே யென்னை யின்முகம் பாரேல்
    எப்படி யுய்குவே னெளியேன்! ௧

படிப்பிலே கேள்விப் பயனிலே மூழ்கிப்
    பார்த்திலேன்; பாரினி லெதிலும்
பிடிப்பிலே னுன்னைத் தொழுதலையே பிதற்றும்
    பேதையே னுலகினர் போல
நடிப்பிலே னன்று நாயன்மார் துதித்த
    நளிர்மல ரடியினிற் கண்ணீர்
வடிப்பதே யுவந்தேன்; வந்தருள் புரியேல்
    வறியனேன் எப்படி யுய்வேன்? ௨

பெற்றவள் வெறுத்தாற் பிஞ்சிளஞ் சேய்க்குப்
    பிழைப்புண்டோ? பேதையேன் முகத்தை
மற்றவர் வெறுத்தால் வெறுப்பதோ நீயும்?
    வஞ்சனேன் செய்திடுங் கோடிக்
குற்றங்கள் பொறுத்தாய் குணநிலைக் குன்றே!
    குளிர்மனக் கருணையி னாலே
சற்றெனைக் காணத் தயவிலை யாகிற்
    சகத்தினி லெப்படி யுய்வேன்? ௩

## எப்படி யுய்குவேன்?

வான்கண்ட பயிர்போல், மழைகண்ட மயில்போல்,
வனமலர் கண்டவண் டினம்போல்,
ஊன்கண்ட வுயிரி னுன்னையே கண்டுள்
ளுவந்திடு முவப்பெனக் கருள்வாய்;
தேன்கண்ட தமிழிற் செப்பியுன் புகழைச்
செகமெலாந் திருவரு ளாட்சி
நான்கண்டு குளிர நாடினேன்; என்னை
நடத்திடே லெப்படி யுய்வேன்? ச

உண்ணலு முனதே, உயிர்த்தலு முனதே,
உடலுயிர் மனமெலா முனதே
எண்ணலு முனதே, இச்சையு முனதே
என்செயற் பயனெலா முனதே
கண்ணுறுங் கதிருங் காட்சியு முனதே
காலனை யுதைத்தகா லுனதே
அண்ணலே யின்னுஞ் சோதித்தா யாகில்
யாங்ஙன முய்குவே னடியேன். ரு



## ௪. வேண்டினேன்

வேண்டினே னுனையே வேறொன்றும் வேண்டேன்;
வினையினே னிடரெலாந் தீரத்
தீண்டினே னுனது திருவடி மலரைத்
தெண்டனிட் டெனைநிவே தித்தேன்.
தூண்டியென் னுள்ளே யுன்னருட் சுடரைத்
துயரிருட் குலத்தினை விலக்கி
ஆண்டவா வுன்ற னறிவினைத் துலக்கி
யாண்டரு ளன்பெனுஞ் சிவனே!

புலைமன மயக்கைப் பூண்டொடும் போக்கிப்
புந்தியுன் மந்திர மாக்கி,
அலைவுறு தினியுன் மலரடி பற்றி,
அன்பினுல் வழிபட வருளாய்.
நிலையிலாச் சித்தச் சுழலினை நிறுத்தி,
நிலைபெற வுன்னிலென் னுள்ளம்,
மலையிலக் காகத் தோன்றுவாய் குருவே
மஹாசிவ சம்புவே சரணம்!

ஓரிரண் டறியேன்; உள்ளவா றுனையே
உள்ளத்தில் உள்ளமா யுணர்ந்தேன்;
சீரிய வாழ்வுச் செடியையுன் னருளாற்
செழித்துநல் வளம்பெற விடுத்தேன்,
பாரெலாம் விளங்கும் பரஞ்சுடர் விளக்கே,
பல்லுயிர்க் குலமென வுலவும்
பேரரு ளிறைவா, பிள்ளையேன் மீது
பிரியம்வைத் தாண்டுகொள் ளாயே!

## வேண்டினேன்

எப்பெயர் தனினும் உன்பெயர் கேட்பேன்;
எவ்வடி விலுமுனைக் காண்பேன்.
துய்ப்பதி லேநீ சுவைப்பதை யுணர்வேன்;
துயிலிலுன் புணர்ச்சியைச் சுகிப்பேன்.
செப்புநன் மொழியில் உன்மொழி செவிப்பேன்
'சிவன் எனைச் சேவடிக் காளாய்
வைப்பனென் றேயான் வழுத்திநிற் கின்றேன்
வள்ளலே யென்னையாண் டருளாய்!

அன்னையே யென்கேன்; அப்பனே யென்கேன்
அவனவள் அதுவெனப் புகல்வேன்;
உன்னையே யல்லா லுறவுமற் றில்லேன்
ஊரிலேன், ஒண்டியாய் வளர்ந்தேன்;
பொன்னையே நிகர்த்த வண்ணனே யுன்னைப்
புகழவே வாய்திறக் கின்றேன்
என்னையே யுன்னுட் கரைத்திட விழைந்தேன்
என்னவா, மன்னவா சரணம்'



அன்புறுதி.

## ௫. அருளுறவே வேண்டும்.

கஞ்சியே தேடிக் காரிகை யாரின்
கலவியே சுகமென நாடி,
வஞ்சமே புரிந்து, வாய்மையை யிழந்து,
வறுமையே வரவரச் சுமந்து,
நஞ்சமே யுண்ட பஞ்சரக் கிளியாய்
நாளுமே நலிகின்று ருலகோர்.
அஞ்சினே னிவரை; ஆண்டவா வுன்றன்
அருளுற வேயெனக் கருளாய்!

கண்ணயர் போதுங் கழுத்தினை நெரிப்பார்;
காரியக் கள்ளராய்ச் சிரிப்பார்.
எண்ணரு மாந்தர் இமைப்பினி லிறக்கும்
இயந்திரச் சூழ்ச்சிகள் விரிப்பார்.
விண்ணிலே யேறி மேதினி யழிய
வெடியுடன் விஷப்புகை பொழிவார்.
மண்ணையே வேட்டு மடிபவர் உறவேன்?
மன்னவுன் னருளுற வருளாய்!

உயிர்க்கொலை புரிவார்; கொலையுண வுண்பார்;
உலகினை யுலைத்திடக் கொதிப்பார்.
அயர்விலாப் பொன்பெண் ணாசைக ளாலே
யதர்மமே கடனெனப் புரிவார்.
பயிர்களை யரிக்கும் விஷப்புழுப் போலே
பாரினில் எளியரை நலிப்பார்.
கயவரி னுறவைக் கனவிலுங் கருதேன்;
கடவுளே யுன்னுற வருளாய்.

## அருளுறவே வேண்டும்

பட்சிக ளிடையோர் கூட்டுறவுண்டு.
 பாரினர் ஓரினம் பேசிக்
கட்சிவேற் றுமையாற் கலகங்கள் செய்வார்.
 காக்கைபோற் கூடியே கலைவார்.
உட்சினம் வைத்தே யுதட்டினிற் சிரிப்பார்.
 ஊரினுக் குழைப்பது போலே
குட்சியை நிரப்புங் கும்பலைக் கூடேன்;
 குலவுக வுன்னரு ளுறவே!

கொள்ளிபோல் விழியார், பிறர்குடி கெடுப்பார்.
 குத்திரங் கோள்பொய்யே யுரைப்பார்.
கள்ளினைக் குடிப்பார்; கற்பினை யழிப்பார்.
 காலத்தைச் சூதினில் இழப்பார்.
வெள்ளியின் வலையில் வீழ்ந்ததஞ் செய்வார்
 விதவிதக் கொடுமைகள் இழைப்பார்.
உள்ளினு முள்ளஞ் சுடுமுற வணுகேன்;
 உள்ளவா வுன்னுற வருளாய்!



## ௬. வழி நடத்தாய்

சரியை கிரியை யோகாதி
சாத னங்கள் செய்தறியேன்.
அரியை யுன்னை யடைந்திடவே
யார்வங் கொண்ட தொண்டனெனும்
உரிமை கொண்டு கேட்கின்றேன்:
உனக்கே மீளா ஆளாகத்
துரிய ஞானச் சுடர்க் கொழுந்தே
துணை நின் றென்னை வழிநடத்தாய்!

மாய்ந்து மாய்ந்து வல்வினையேன்
மாயப் பிறவிக் கடலினிலே
தோய்ந்து தேய்ந்து துரும்பானேன்
துணிந்துன் பாதப் புணையினையே
பாய்ந்து பற்றிக் கூவுகின்றேன்,
பரந்த மாய விருளினிலே
சாய்ந்தி டாமல் வழிநடத்தாய்
சரணம் சரணஞ் சங்கரனே!

பட்டாங் கொன்றும் படித்தறியேன்;
பாடி யாடப் பாட்டறியேன்.
அட்டாங் கத்தைப் பயின்றறியேன்
அன்பே செய்துன் னடிபிடித்தேன்.
* எட்டா யுருக்கொள் எம்மானே
ஏழை யிந்த வுலகறியேன்
ஒட்டா தெதிலும் முன்னடியில்
ஊன்றி நிற்க வழிநடத்தாய்!

---

* ஐம்பூதம், இரவி, மதி ஆன்மா இவை இறைவனது எட்டுருக்களாம்.

வழி நடத்தாய்

என்று முன்னை மெய்யடியேன்
இறைஞ்சி யிறைஞ்சிக் கரைகின்றேன்.
ஒன்றுஞ் சொல்லா திருப்பாயேல்
ஓகோ கருணைத் திற மென்னே?
கன்றுக் கிரங்காத் தாயுண்டோ?
கல்லோ வுனது நெஞ்சகமும்;
இன்று நாளை யென்னுமல்
இருக்கு மிடத்திற் கெனைநடத்தாய்!

யானே துன்னை யல்லாதே
யாது மான சோதியனே?
வானே, துரிய வளநாட்டின்
வாழ்வே, வாழ்விற் கின்னுயிரே;
தேனே தெளிந்த சித்தமிசை
தித்தித் தூறுந் தெள்ளமுதே
ஊனே போற்றித் திரிவேனை....
உன்னை நோக்கி வழிநடத்தாய்!



## அனுபூதி.

### எ. மெய்ப்பொருளே

தித்தித் துள்ளே யள்ளூறுந்
தேனே ஞான வானமுதே,
எத்திக் கினிலு முயிர்க் குயிராய்
இருந்து கருணை மிகச் சுரந்து,
முத்திக் கேகல் வழிதிறப்பாய்
முதல்வா வுனது திருவடிக்கே
பித்தாய் நின்று பிதற்றுகின்றேன்
பேதங் கடந்த மெய்ப்பொருளே!

பித்துப் பிடித்துப் புலனலையப்
பின்னே மாய மனமலையச்
சித்த மலைய நிலையின்றித்
தியான மூன்றத் தலங்காணேன்.
புத்தி யலையா துன்னடியிற்
பொருந்தி நிற்கப் புகலருளாய்.
சுத்த முத்த சமரஸமாஞ்
சோதி யான மெய்ப்பொருளே!

புல்லேன் உனது பெருங்கருணைப்
புணையை மருவிக் கரையேற
வல்லே னில்லேன். வலியுற நீ
வணக்கி னன்றி யுனை வணங்கக்
கல்லேன். வஞ்ச மனக்கல்லைக்
கரையேன். உனது திருப்புகழைச்
சொல்லேன். எவ்வா றெனையாள்வாய்
சொல்லைக் கடந்த மெய்ப்பொருளே!

## மெய்ப்பொருளே

வம்பர் பின்னே வழிநடந்தேன்,
வறியேன் வஞ்சக் கொடுமனத்தேன்.
அன்பின் பெருமை யானறியேன்
அடியார் கதைகள் பல கேட்டும்,
நம்பா துன்னை யுலகினையே
நம்பி நம்பி நான்கெட்டேன்!
என்பா லொளிந்த வுனை யறியேன்
இதய மான மெய்ப் பொருளே!

வேண்டு முனது திருநாமம்
வெய்யேன் பொய்கள் விலகிடவே
வேண்டு முனது திருவடியே
வெறியேன் மதியின் மயக்கமற.
வேண்டு முனது திரு நோக்கம்
வெளியே செல்லும் புல னடங்க.
வேண்டு முனது திரு வருளே
வேதங் கடந்த மெய்ப் பொருளே!.



## ௮. மன்றுளாடு மாமணியே

நில்லா வுலகை நிலை யென்று
நின்னை மறக்கக் கடவேனோ?
எல்லா முனது விளையாட்டென்
றிருந்த படியா னிருந்திடவே,
கல்லா லடியிற் கற்பித்த
கல்லாக் கல்வி யெனக்கருள
வல்லா யோவென் வாழ்வமுதே!
மன்றுளாடு மாமணியே!

மீறி மீறிப் புறஞ்செல்லும்
வேகப் புலனை வென்றடக்கி
நூறி நூறி யாணவத்தை
நுண்ணுடலின் சேட்டை யெல்லாம்
ஆறியாறி 'ஹர' வென்றே
அடியா ருடனே யடி பெயர்த்து
மாறி மாறி யாடேனோ,
மன்றுளாடு மாமணியே!

சினத்தை யடக்கி, நிலையில்லாச்
சித்த மடக்கி, மதி மயக்கும்
இனத்தை யடக்கித் தீவினையின்
எழுச்சி யடக்கி, யடங்காத
கனத்த காமப் பேயடக்கிக்
கருதி யுன்னைக் கசிந்துருக
மனத்தை யடக்கக் கடவேனோ
மன்றுளாடு மாமணியே!

## மன்று ளாடு மாமணியே

வீசி வீசி வார்த்தைகளை
விருப்பு வெறுப்பு வினைமலியப்
பேசிப் பேசி வீணானேன்,
பெரிய மௌனத் தடங்கடலே,
ஆசை யடக்கி யானென்னும்
அகந்தை யடக்கி, அலைந்தோடும்
வாசி யடக்க வழிதிறப்பாய்
மன்று ளாடு மாமணியே!

பதியை மறந்து, மர்க்கடர்போற்
பாசா டவியிற் சுழன்றினிய
கதியை மறந்து, தீவினைசெய்
கடைய னாகி நொந்திறக்கும்
விதியைத் துறந்து, நிலையின்ப
வெளியை நாடி யுனைக்கூட
மதியைத் திறந்துன் னருள்பொழிவாய்
மன்று ளாடு மாமணியே!



## ௯. சிவ குருவே!

வாய்மை யான வாக்கமுதம்,
வழுத்த நல்ல தமிழ்வளமை,
தூய்மை யான சிந்தனைகள்,
சுத்த மான வாழ்வின்பம்,
நோய்க ளற்ற வுடலுறுதி
நுட்ப மான நல்லறிவு,
தாய் மனம்போ லன்புறுதி
தந்தா ளென்னைச் சிவகுருவே! ௧

உனைப்பே ரன்பு செய்வேனை
உலக மாய மேவுகின்ற
வினைப்பேய் பற்றி னென்செய்வேன்,
விரிந்த ஞானச் சுடரொளியே!
எனைப்பே ரின்ப வழிநடத்தி
இரண்டற் றுனது பொற்பாத
நினைப்பே யாக நிலைநிறுத்தாய்
நீயே தஞ்சம் சிவகுருவே! ௨

தேசி லாத சிறுமதியேன்
சித்த மலைய யானலைவேன்,
பேசிப் பேசிப் பிழை செய்வேன்
பெரிய மோன வாரிதியே!
மாசி லாத மணிமன்றில்
வாவி யாடுந் திருவடிக்கீழ்த்
தூசி யாகி யுய்வேனோ
துரியா னந்தச் சிவகுருவே! ௩

## சிவகுருவே

முன்னே செய்த தீவினைகள்,
　　மூட மதியின் சேட்டையினுல்
பின்னே செய்த தீவினைகள்,
　　பெரிய பெரிய மலையளவாம்.
இன்னே யின்னுந் தீவினைக்கே
　　யிழுக்கும் புலனை யடக்கிடவே
அன்னை யப்பா மனவுறுதி
　　யருளாய் சுத்த சிவகுருவே! ச

புரையே செய்யும் பொய்ப்புலனைப்
　　புறமே செல்லா துள்ளடக்கித்
திரையே துள்ளாச் சித்தத்திற்
　　சிதையா துன்னைச் சிந்தித்துக்
கரையே யில்லாப் பேரின்பக்
　　கடலி லாடக் கடவேனே,
துரையே ஞானச் சுடர்க்கொழுந்தே,
　　சுத்த சக்தி சிவகுருவே! ரு



## ൬. என்னுயிர் வேந்தனே!

ஆண்ட வாவுன தடிமலர்த் தேனை
அள்ளி யள்ளியான் பருகிட வேண்டும்.
வேண்டும் உன்னடி யார்திருக் கூட்டம்.
வெய்யனேன் பிறப் புய்ந்திட வேண்டும்.
வேண்டு முன்னருள் வேட்கையென் னுள்ளம்;
வேறு வேட்கைகள் ஆறிட வேண்டும்.
வேண்டு முன்புகழ் பாடிடு மின்பம்
விமல னே,யென தாருயிர் வேந்தே! க

உலகி லுன்பர மானந்த முண்ண
வுட லுயிருட னுள்ளமு மீந்தாய்.
நிலவு பெண்மையு மாண்மையு மானாய்.
நிறைந்த யோகமும் போகமு மானாய்.
மலநி னைவுக ளின்றியுன் அன்பே
வளர வாழ்ந்திடும் வாழ்வெனக் கீவாய்.
இலகு நெஞ்சினிற் கோயில்கொண் டாளும்
இறைவ னே,யென தின்னுயிர் வேந்தே! உ

அம்மை யப்பனு நண்பனு மாவாய்.
அருட்பெருங் குரு தேவனு மாவாய்.
எம்ம தத்திற்குஞ் சம்மத மாவாய்;
எவ்வு யிர்க்கும் உயிர்க்கன லாவாய்.
பன்மை யாம்ஒரு பான்மையு மாவாய்.
பரம நீசக சீவனு மாவாய்.
இம்மை யம்மைப் பயன்களு மாவாய்
இதய நாடக னே,சுடர் வேந்தே! ௩

## என்னுயிர் வேந்தனே

மறந் திடா துனைப் போற்றிசெய் வாக்கும்,
மறுவி லாது நினைமன மாண்பும்,
துறந் தகந்தையைத் தொண்டுசெய் யன்பும்,
தூய மெய்வழி நின்றொளிர் வாழ்வும்,
பிறந் திறந் துழலாம லெப்போதும்
பிறிதிலா துனைக் கூடிடும் பேறும்.
அறந் தனைநிலை நாட்டிடும் வீறும்
அப்ப னேயருள் ஆருயிர் வேந்தே! ௪

காட்ட வேண்டுமுன் கதிர்மணிச் சோதி,
கரந் துளேயிருந் தாய்விரிந் தாய்நீ;
கூட்ட வேண்டுமுன் குறையறு மின்பம்.
கொண்டெனை யெனுட் கூத்திட வேண்டும்.
பூட்ட வேண்டுமென் பொய்ப்புல வாயை
பொழிய வேண்டுமுன் மெய்ச்சிவ போகம்.
ஆட்ட வேண்டுமென் யாக்கையை நீயே.
அமல னே,யென தாருயிர் வேந்தே! ௫



## கக. குருமணிக் கண்ணி

ஆனந்த ஜோதி யருள்வெள்ளம் பாய்ச்சியென்னுள்
ஞானப் பயிர்விளைப்பாய் ஞானக் குருமணியே! க

பிடித்துன் மலர்ப்பாதம் பித்தாகிக் கூவும்
அடியேனைக் காத்தருள்வா யன்புக் குருமணியே! உ

நினைத்து நினைத்துன்னை நீள்விழிநீர் பாய்ச்சும்
எனையாண்டு கொள்வதெப்போ தின்பக் குருமணியே! ந

பேறென்றுன் பொன்னடியிற் பிள்ளையென வாழ்வதல்லால்
வேறொன்று மிச்சையிலேன் வீரக் குருமணியே! ச

ஆண்டா ளடிமையினை யப்பா பிறிதொன்றும்
வேண்டாமை வேண்டுகின்றேன் வேதக் குருமணியே! ரு

பொல்லா மனமாயைப் பூண்டுதனை வேரோடுங்
கெல்லாயுன் பார்வையினாற் கீர்த்திக் குருமணியே! சு

நின்ற நிலையினிலே நின்றுன் சுகமருந்தி
யென்று மிருக்கவரு ளீசர் குருமணியே! எ

சித்தத் திரையடங்கிச் சின்மயத்தீ கூடியின்ப
முத்திப் பெருக்கருளாய் முத்தர் குருமணியே! அ

இன்றென்று நாளையென்று பேமாற்றங் கொள்ளாமல்
என்றென்று நிற்குநிலை யீவாய் குருமணியே! கூ

சாதனமுஞ் சித்திகளுஞ் சக்திகளு முன்னருளே
ஆதலினா லுன்னை யடைந்தேன் குருமணியே! ய

அறியே னறிவெதுவும் ஆண்டா யுனக்கே
யுரியே னதுபோதும், உண்மைக் குருமணியே! கக

குருமணிக் கண்ணி

கண்ணார வுன்னையெங்குங் காணவே யென்னுள்ளக்
கண்ணாகி நின்றருள்வாய் காட்சிக் குருமணியே! கஉ

உன்னைக் கலந்துயிரில் உன்பணிகள் செய்திடவே
என்னைப் பணித்தருளாய் இறைவா குருமணியே! கங

ஊனு ருடலு முனதொளியைக் காட்டிடவே
ஞானசித்தி நீயருளாய் ஞானக் குருமணியே! கச

வாய்மை யுபசாந்த வாழ்வு நலமுறவே
தூய்மை யருள்புரிவாய் சுத்தர் குருமணியே! கரு



## ௧௨. அருட்சோதிக் கண்ணி

சீராரு ஞானத் திருமலையி லேவிளங்கும்
பேராரு மன்புப் பெருக்கே யருட்சோதி! ௧

உன்னைச் சரணடைந்தே னொப்பில்லா வான்கருணை
மன்னா கருணைபொழி வான்போ லருட்சோதி! ௨

தேனோங்கு மின்பத் திருவடியில் வண்டாக
யானோங்கு மின்பமரு ளப்பா வருட்சோதி! ௩

யான்வேறு நீவேறென் றன்பிற் கிரண்டுண்டோ?
நான்வேறற் றுய்வேனோ நாதா வருட்சோதி! ௪

பொல்லா மனமாயை போக்கியெனை நீக்கமறப்
புல்லாய் பரமசுக போதா வருட்சோதி! ௫

காமமெனுங் காட்டினிலே கண்கட்டி யாட்டாமல்
நீமகிழ்ந்தென் காதலனாய் நிற்பா யருட்சோதி! ௬

பெண்ணுமண்ணும் பொன்னும் பிரித்தென்ற னன்பை
உண்ணாது நீயே யுகப்பா யருட்சோதி! [யெல்லாம் ௭

உப்புமப்பும் போலவுன்னை யொன்ற வொருசூட்சி
செப்பி வழிநடத்தாய் சித்தா வருட் சோதி! ௮

யோகசித்தி பெற்றுன் உணர்வாம் பரிசுத்த
போகசித்தி யெய்தப் புரிவாய் அருட்சோதி! ௯

தாயாகப் பெண்ணைச் சமமா யுயிர்க்குலத்தை,
நீயாகப் பாரை நினைப்பே னருட்சோதி! ௰

ஆண்டவனும் சக்தியும்போல் ஆண்பெண்ணைக் காணுமின்பம்
வேண்டினேன்;பேதபுத்தி வேண்டே னருட்சோதி!

அன்பெல்லா முன்னன்பே யார்வமெல்லா நீயானேன்;
என்புருகு மன்போ டிணைவா யருட்சோதி! ௧௨

## அருட்சோதிக் கண்ணி

உருவு மருவுநீ; உய்யவென்னை யாண்ட
குருவுநீ யென்றறிந்து கொண்டே னருட்சோதி! ௧௩

உன்காத லென்னை யுருக்கி விழுங்கியதை
நன்குன் மனமறிவாய் நாதா வருட்சோதி! ௧௪

என்னுண்மை யுன்னுண்மை யென்னாவி நீயென்னில்,
உன்னைப் பிரிந்துய்வு முண்டோ வருட்சோதி! ௧௫

சுற்றித் திரிந்து சுகங்கெட் டுனதடியைப்
பற்றினே னென்முகத்தைப் பாரா யருட்சோதி! ௧௬

தான மழிந்தே தரங்கெட்டுத் தாழாது
மானமுடன் வாழவைப்பாய் மன்னா வருட்சோதி! ௧௭

உன்னை யறிந்தடங்கி யுன்மயத்தை யெண்ணியெண்ணி
யென்னை யறிந்தடங்க லின்பம் அருட்சோதி! ௧௮

அத்தைதத்தின் றுங்கே யமர்ந்திருக்கு மானந்தத்
தத்துவமாஞ் சித்திதனைத் தாரா யருட்சோதி! ௧௯

சுத்தான்ம நேயந் துலங்க வுலகமெல்லாம்
சித்தாடல் செய்வாய் திருவே யருட்சோதி! ௨௰



## அன்புறுதி

### ௧௩. மனப்பேய்க் கண்ணி

நாளு விகாரமின்றி நாயகனைக் கூடிடமெய்ஞ்
ஞானச் செழுமுடியை நாடாய் மனப்பேயே! ௧

இந்திரஜா லங்காட்டி யென்னை யிழுக்கடித்தாய்;
சொந்தநிலை காணிற் சுகமாம் மனப்பேயே! ௨

ஊரெலாஞ் சுற்றி யுலகெலாம் வட்டமிட்டுப்
பேரெலாம் பெற்றவெறும் பேதை மனப்பேயே! ௩

ஒன்பதுவா யல்களிலு மோடி நடித்தாடி
வம்பைப் பெருக்கும் வலுத்த மனப்பேயே! ௪

கள்ளக் குரங்கே கடுங்காம நோய்க்குரங்கே
துள்ளாது ஞானமலை தூங்காய் மனப்பேயே! ௫

உயிர்வீட்டி னுள்ளே யொளிவீ டுனக்கிருக்கத்
துயர்வீட்டைத் தேடித் துவண்டாய் மனப்பேயே! ௬

நாக்கை யடக்கி நலந்தீதைப் பார்த்துபுலப்
போக்கை யடக்கிடடா பொய்யா மனப்பேயே! ௭

தீனியிலு மேனியிலுஞ் சித்த மலையாமல்
ஞான முயற்சியினை நாடாய் மனப்பேயே! ௮

நாக்கிற்குங் கண்ணிற்கும் நாற்ற வயிற்றிற்கும்
யாக்கைக்குங் கட்டுண்டாய் ஐயோ மனப்பேயே! ௯

மாதரெல்லாந் தெய்வசக்தி மாதாவென் றேயுணர்வாய்;
தீதொழியும் காமத்தீ தின்னு மனப்பேயே! ௰

பூத்த மலர்போலப் பொற்பைநீ பார்த்திடுவாய்;
தீத்தினவு சென்று திருவாம் மனப்பேயே! ௧௧

கண்ணை யுருட்டிக் கருத்தினுக்குக் கண்ணிவைக்கும்
கண்ணிலகப் பட்டுக் கலங்கேல் மனப்பேயே! ௧௨

நாவென்னுங் கொம்பேறி நாட்டியங்க ளாடுகின்றாய்!
காவலை மீறுங் கசடா மனப்பேயே! ௧௩

அன்பாகத் தாயார் அளித்த வமுதிருக்கத்
துன்பச் சுவைக்கே துடித்தாய் மனப்பேயே. ௧௪

என்பேச்சைக் கேளாமல் எங்கெங்கோ சுற்றுகிறாய்
உன்பேச் செனக்கேன், உதவா மனப்பேயே! ௧௫

தண்ணீர் மதியலைந்தாற் சாந்தமாய் நின்றிலகும்
விண்ணின் மதிக்கென் விளம்பாய் மனப்பேயே! ௧௬

மதியாதார் வீடுகளின் வாயிலிலே நின்று
சதிசெய் தெனைக்கெடுத்தாய் சண்டி மனப்பேயே!

ஈயாதார் வாசலிலே யீபோ லிருந்துவெறும்
வாயையே மென்றாய் வறட்டு மனப்பேயே! ௧௮

நாக்கை யடக்கியுள்ள நாடி யடக்கியுன்றன்
போக்கை யடக்கிடுவேன், பொல்லா மனப்பேயே! ௧௯

வாயைத் திறவாதே வார்த்தைவீ ணாடாதே!
மாயம் புரியாதே வாவுள் மனப்பேயே! ௨௰

ஏடு மெழுத்து மிசையும் வசையில்லா
நீடுசுக மாமோ? நினையாய் மனப்பேயே! ௨௧

கைதட்டிப் பேசிக் கருத்திலே வஞ்சமுடன்
பைதட்டி வைத்திழுந்தாய் பாழு மனப்பேயே! ௨௨

முந்திழைத்த தீமைதனை முன்னே நிறுத்தியென்னைச்
சந்திக் கிழுப்பாய் சனியே மனப்பேயே! ௨௩

நெஞ்சாரப் பொய்சொல்லி நின்னைப் புகழுமந்த
வஞ்சத்தை வாள்கொண்டு மாய்ப்பாய் மனப்பேயே!

## அன்புறுதி

துய்த்துப் பிழைக்கத் துணிந்துநீ நாடோறும்
பொய்மூட்டை கட்டியது போதும் மனப்பேயே! ௨௫

வாயெல்லாம் பொய்யாகி வஞ்சகமே நெஞ்சகமாய்ச்
சீயினும் வாழாதே திருட்டு மனப்பேயே! ௨௬

யார்வருவார் வாராரென் றங்குமிங்கும் பாராதே;
பூராய மாயுள்ளே போடா மனப்பேயே! ௨௭

பிறர்குற்றம் பேசாதே பேசுவதைக் கேளாதே!
அறிவாயுன் னுள்ளே யடங்காய் மனப்பேயே! ௨௮

உன்குற்றம் போக்கியுள்ளே யுள்ளபடி நின்றுயர்ந்தால்
என்குற்ற மின்னொருவ ரீவார் மனப்பேயே? ௨௯

அகவழுக்கு நீங்காமல் அம்பலத்தி லாடிப்
புகழுக் கலையாதே புல்லா மனப்பேயே! ௩௰

உள்ள மலரூன்றி யுச்சிமலர்த் தேனுண்ண
மெள்ளமெள்ள மேலேறு; மேலா மனப்பேயே! ௩௧

தனிமைத் தவநலமுஞ் சான்றோர் திருத்தொண்டும்
இனிய துணையா மியற்றாய் மனப்பேயே! ௩௨

கட்டிப்போட் டுன்னைக் கவலை யொழிப்பமெனில்
எட்டியெட்டித் தாவுகிறாய் எட்டா மனப்பேயே!

திறங்கெட் டலைந்தென்னைச் சீரழிக்கா தேபோ!
உறங்குகின்ற போதும் உறங்கா மனப்பேயே! ௩௪

நல்ல பதமிருக்க நாய்ப்பதத்திற் காளாகி
யல்லற் படுத லழகோ மனப்பேயே! ௩௫

சச்சித் சுகமளிக்குந் தன்னை யறியாமல்
எச்சிற் சுகமுண்டாய் ஏனோ மனப்பேயே! ௩௬

தானான தத்துவத்தை தன்மயத்தி லொன்றாமல்
நானென் றகங்கரிக்கு நாசா மனப்பேயே! ௩௭

ஒருபேயி னாலே யுலகெல்லாம் பேயாச்சு
வருவதெல்லாம் உன்னாலே வம்பு மனப்பேயே! ௩௮

முன்னாலும் பின்னாலும் மூட்டைகட்டி வெவ்வினைகள்
என்மேற் சுமத்துகின்றாய் ஈனா மனப்பேயே! ௩௯

என்னை யறிந்திருமை யில்லையென நன்கறிந்தே
உன்னை யொழிப்பேன் உருவில் மனப்பேயே! ௪௰

சுத்தான்ம ஞானத்தாற் சுட்டெரித்துன்சேட்டைகளை
வைத்த படியிருக்க வாராய் மனப்பேயே! ௪௧



## கச. சாந்தம்

சாந்தமெங்கே சாந்தமெங்கே யெங்கே யென்றே
சடுகுடுபோய்ந் துலகமெலாஞ் சலித்துப் பார்த்தேன்.
மாந்தர்களின் உதட்டுறவில் மனதைக் காணேன்;
மனவுறவுந் தினவுகளை வளர்க்கக் கண்டேன்.
வேந்தர்களின் விருந்துடனே மருந்துங் கண்டேன்;
வீரரிடம் போர்க்கொலையின் வெறியே கண்டேன்
சார்ந்துதனைத் தானாக நிற்ப தொன்றே
சாந்தமிது சத்தியமென் னிதயத் தேவே. க

கண்கெட்ட காமாதிக் காடு சுற்றிக்
கதிகெட்டுப் போனவரோ கணக்கில் கோடி;
மண்கட்டி யாண்டிடவே மமதை கொண்டு
மடித்தபிணை மலையுடனே மடிந்தார் கோடி;
விண்ணெட்டப் புகழ்சிறந்தும் விஷப் புழுப்போல்
விசனப்பேய்க் கிரையாகி விழுந்தார் கோடி;
பண்கட்டிப் போற்றிநிதம் பரம னேயுன்
பதம்பற்றி நிற்பதுவே பரம சாந்தம்! உ

வல்லரசு நாடுகளைப் பார்க்கப் போனால்
வழியெல்லாம் பட்டாளம்; வானும் பூவும்
கொல்லசுரர் களியாட்டம்; கொலையின் கூத்து;
கொடுமைகளை நினைத்தாலும் மனங்கொதிக்கும்;
வெல்லுவது வெடிகுண்டு; 'வென்றே' னென்று
வீறுப்புப் பேசினவர் குண்டால் வீழ்ந்தார்;
மல்லரக்கர் உன்சக்தி யாலே மாய்வார்;
மனமடங்கி வழுத்துவதே யெனது சாந்தம்! ங

## ௧௫. வேதப்பொருள்

ஆதிப் பொருளே யநேகவித மானதென
வேதப் பொருளே விளம்பியபின்—மேதினியே ௧

சாதிமதச் சச்சரவைக் கட்டிவைத்துச் சன்மார்க்கச்
சோதிவழி நின்றே சுகம்பெறுவாய்—நீதியுடன் ௨

எம்மதத்தைப் பார்த்தாலும் இன்பப் பொருளொன்றே
சம்மதமாகுமது சத்தியமே—திம்திமென ௩

மத்தளங்கள் கொட்டி மகரவீணை தடவிப்
பத்தர் பரவசமாய்ப் பாடுவதும்—சித்தமிசை ௪

உள்ளடங்கி யோகமுனி தேடுவதும் கூடுவதும்
விள்ளரிய ஞான வியன்பொருளே--தெள்ளறிஞர் ௫

ஓம்தத்ஸத் ஓம்என்பர்; ஓம்நமச்சி வாயவென்பர்
நேமமிகு சைவர்கள்; வைணவர்கள்—ஓம்நமோ ௬

நாராய ணாவென்பார்; நந்தாய்ஓம் சக்தியென்பார்
வீரமிகு சாக்தர் விறுவிறுப்பாய்;—தீரனும் ௭

புத்தா சரணமென்பார் பௌத்தர்; சமணர்கள்
சித்தர்அரு கர்வணக்கஞ் செய்திடுவார்--சுத்தத்தீ ௮

தன்னைப் பணிவார் ஜரதுஷ்ட்ரர்—வானுலக
மன்னைப் பணிவார் மதியூதர்--கன்னிமகன் ௯

ஏற்ற சிலுவையினை யேத்திடுவார் ஏசுபக்தர்
ஆற்றல் வளரிஸ்லாம் அன்பர்கணம்—காற்றதிர ௰

அல்லாஹோ அக்பரென்றே ஆண்டவனைத் தாள்பணிவார்.
எல்லா மினிதுவப்பான் ஏகனவன்—சொல்லாலே ௧௧

இல்லையென் பார்க்கும் இதயத் துடிப்பாவான்
எல்லையில்லா தெங்கும் இயல்பானன்—உள்ளபொருள் ௧௨

ஒன்றே; மதஞ்சார் உலகோர் பலவென்பார்
நின்றே யறிவார் நிலைபொருளை—மன்றுள் க௩

நடம்புரியுஞ் சித்தனென்பர் சுத்தனென்பர்; எல்லா
உடம்பு மவனுறையும் வீடே;—மடல்விரிந்த க௪

பூவின் மணம்போலும் பூதபௌதிகங்களிலே
மேவி விரிந்து விளையாடும்—ஆவியென்பார். க௫

பேர்வடிவப் பேதப் பெரும்போர் ஒழிந்துவிட்டால்
யார்வடிவும் ஒன்றே யணிவடிவாம்—பாரினிலே க௬

நானார்நீ யாரவனார் நானாவிதமான
ஊனா ருடலெல்லாம் ஓர்நிறைவாம்—ஞானமிதைச் க௭

சிந்தித்து வாழுந் திருவாளர் மற்றோரை
நிந்திக்கச் சம்மதியார்; நேரேதாம்—வந்திக்கும் க௮

ஒன்றே பலவடிவா யுற்றதெனக் கண்டுநிதம்
நன்றே புரிவர் நயமுடனே—வென்றுமனம் க௯

அச்சம் பகையின்றி யாத்திரப் பொறாமையின்றித்
துச்ச மொழியின்றித் துயர்செய்யும்—நச்சு உ௰

மரம்போல வாழாது நாத்திகம்பேசாது
வரம்பெற்ற கற்பகம்போல் வாழ்வார்—சிரம்பெற்ற உக

உண்மையறி வின்பமய மொன்றாம் பரம்பொருளின்
தன்மை யறிந்து தமையறிந்து—பன்மையாம் உஉ

எவ்வுயிருந் தம்முயிரென் றின்பமே செய்வரிது
செவ்வியவே தப்பொருளாந் தேர். உ௩

## கசு. மாயக்காரி

[விழித்த ஞானவீரன் மாயத்தில் மயங்கா திருக்கும் படி மனத்திற்கு அனுபவ வாயிலாகப் புத்தி கூறுகிறன்]

நல்லவ ளென்றிவளை
நம்பியே மாந்தேனடி
பொல்லாத கள்ளியிவள்—மனமே
பொய்ம்மாயக் காரியடி! க

முன்னொரு காலத்திலே
மோகப்ப டுத்தியென்னைப்
பின்னம் புறம் அறைந்தாள்—மனமே
பேய்நட்புப் பொல்லாதடி! உ

அன்புமிகக் கொண்டேன்
ஆசையெல் லாமுரைத்தேன்
வம்புவ ளர்த்தாளடி—மனமே
மானங்கெ டுத்தாளடி! ௩

கண்டதை யில்லையென்பாள்
கற்பனைப் பொய்யுரைப்பாள்
கொண்டக ணவனையும்—கிளியே
கொஞ்சிக் கழுத்தறுப்பாள்! ச

சாமிவ ணங்கும்போதும்
சரஸவுல் லாஸமுடன்
காம வலை வீசுவாள்—மனமே
கண்கொத்திப் பாம்படியோ! ரு

# அன்புறுதி

இகழ்ந்து புறம்பேசி
இப்புறம் வஞ்சகமாய்ப்
புகழ்ந்துகு டிகெடுப்பாள்—மனமே
புல்லியு யிர்குடிப்பாள்! ௬

ஒத்து வருவதுபோல்
ஓட்டம் பிடித்திடுவாள்
பித்துப் பிடிக்கச்செய்வாள்—மனமே
பின்னேகல் லையெறிவாள்! ௭

தோத்திரஞ் செய்வதுபோற்
சூனியம் வைத்திடுவாள்
நாத்திகப் பிண்டமடி—மனமே
நம்பிட வேண்டாமடி! ௮

இசையென்றும் பட்டமென்றும்
இதமாய்ப் பிடித்துநம்மைக்
கசையடி யீவாளடீ—மனமே
கருத்தைக் கெடுப்பாளடி! ௯

அறிவா யிருந்துவெல்வோம்
அந்நிய மாயத்தினை
நெறிகண்டு முன்னேறுவோம்—மனமே
நித்திய னைத் தேறுவோம்! ௰



## கஎ. இன்பப்பேறு

மோன மேவடி வாகிய முதலே
முத்திக் கேவழி காட்டிய சித்தே,
வானி னும்விரி வாகிய பரமே,
வள ருயிர்க்குல மாகிய வுயிரே,
தேனி னும்தித்திப் பாகிய சுவையே,
தேவர்க் கும்அரி தாகிய வமுதே,
ஈன னாகிலும் உன்னடி யேற்றேன்
இன்பப் பேறெனக் கருள்புரி வாயே! க

நானெ னுஞ்செருக் கற்றிட வேண்டும்,
நலிவி லாதுனை நம்பிட வேண்டும்;
தானென் றென்னு ளெழுந்துன் சொரூபம்
சாந்த மாகந டஞ்செய வேண்டும்.
வான ரசு விளங்கிட வேண்டும்,
வாய்மை யான விடுதலை வேண்டும்,
ஞானத் தாகத்தைத் தீர்த்திட வேண்டும்,
நாத னேயருட் சோதிமு தல்வா! உ

அவனி நோய்கள் அழிந்திட வேண்டும்.
அமர வாழ்க்கை செழித்திட வேண்டும்.
எவ ரெவர்க்கும் அடிமையில் லாமல்,
எங்கும் உன்னருள் ஆண்டிட வேண்டும்.
சவ வுறக்க மொழிந்திட வேண்டும்.
தனிய கந்தை தணிந்திட வேண்டும்.
தவ வினைகள் சயம்பெற வேண்டும்.
சச்சி தானந்தப் பேறெனக் கருளாய்! ந.

## அன்புறுதி

விடய வாதனை யற்றிட வேண்டும்.
வினை யிரண்டு மகன்றிட வேண்டும்.
மடமை வெவ்விருண் மாறிட வேண்டும்.
மாறி லாதசு தந்தரம் வேண்டும்.
கடலி லாறு கலப்பது போலே,
கனியி லேசுவை காண்பது போலே,
உடலி டங்கொ ளுயிர்க்குயி ரேயுன்
ஓங்கு ணர்வெனை யுண்டிட வேண்டும். ௪

எவ்வு யிரு மெனதுயிர் போலே
எண்ணி யன்பு மிகச்செய வேண்டும்.
வெவ்வி ருட்பகை நீங்கிட வேண்டும்.
வேற்று மைகள் விலகிட வேண்டும்.
துவ்வினிய சகோதர ராகத்
தொல்லு லகினர் ஒன்றுபட் டென்றும்
திவ்வியத் திரு வாழ்வுறல் வேண்டும்.
சின்ம யானந்தப் பேறெனக் கருளாய்! ரு



## கஅ. இதயக் கனிகள்

இன்பமெய் விண்ணே, யென்றன் இதயமே, இதயத் துள்ளே
அன்புமெய் விளக்கே, என்னுள் யானெனு மறிவ ளுகிப்
பண்புடன் வளரு நட்பே, பகலிர வற்ற பார்ப்பே,
தன்பதந் தானே யான சச்சிதா னந்த வாழ்வே! க

ஆய்வுறுங் கலைக ளெல்லாம் அருக்கன்முன் மீன்க ளென்னத்
தேய்வுறச் சுடரு ஞானச் செங்கதிர்ப் பிழம்பே! யென்றன்
வாய்மனங் கடந்த மோன வானமே! தானே தானுய்த்
தோய்வற வுலகி லேந்து தொழில்புரி யருளே போற்றி! உ

உலகெலாங் கோயி லாகி யுயிரெலா மேனி யாகிப்
பலபல தோற்ற மெல்லாந் தன்னருட் பன்மை யாகி,
அலைமன மடங்கி நிற்கு மமைதியில் ஒருமையாகி,
நிலைபெய ராத வுண்மை நேயமே போற்றி போற்றி! ந

அண்டத்தி லுள்ள வாறே 'யக மக' மென்றித் தூலப்
பிண்டத்து ளாடு மான்மத் தெய்வமே, பிறவி நோயைக்
கண்டிக்கு மருந்தே, ஞானக் கனவினு லென்னை முற்றும்
உண்டிரண் டற்று நிற்கும் உண்மையாம் ஒன்றே போற்றி! ச

மறப்பனோ வுன்னை? நீங்கி வாழ்வனோ? மாயச் சேற்றிற்
பிறப்பனோ? வினையேன் செய்த பிழைகளைப் பொறுத்த
[வுன்னைத்
துறப்பனோ? தொடர்பு நீங்காத் துரியவிண் ணடைந்த பின்பும்
இறப்பனோ? உன்னை யன்றி யிருப்பனோ நெஞ்சத் தேவே? ரு

## அன்புறுதி.

வானொடு நீலம் போலும், வாழ்வொடு வளியே போலும்,
தேனொடுந் திதிப்பைப் போலும், சித்தொடுஞ் சத்தைப்
[போலும்,
ஞானமு ஞேய மொன்று ஞானியைப் போலு மென்றும்
யானொடு நீயாய் வாழு மற்புதங் கண்டு கொண்டேன்! ௬

கண்டதோ ரிடமெ லாமுன் கனிமுகங் கண்டேன்! உள்ளஞ்
சென்றதோ ரிடமெ லாமுன் செம்பொனார் மேனி கண்டேன்!
நின்றதோ ரிடமெ லாநீ யென்னுளே நிற்கக் கண்டேன்!
வென்றதோர் வெற்றி தன்னில் வீரநீ விளங்கக் கண்டேன்!

போற்றியென் னுயிரே, பூத பௌதிகச் சட்டை பூண்டு
காற்றினை யுயிர்த்தெ னுள்ளே கதிரெனக் கனலுந் தீயே,
சாற்றிட வொண்ணச் சீவ சாட்சியாய்க் காணுங் கண்ணே,
ஏற்றரு ளன்புச் சேயின் இதயப் பொற் கனிக ளெல்லாம்! அ



## கசூ. திருவடிப்பற்று

எச்ச மயத்தும், எவ்வுல கத்திலும்
உச்ச மாகவுன் சீர்த்திக ளோங்குக!
நச்சை யுண்டிந்த ஞாலத்தைக் காத்தனே
அச்ச மில்லையுன் அன்பருக் கென்றுமே! க

எங்குச் சுற்றினு மென்மன முன்னடி
தங்கி நிற்கத் தயவுசெய் தந்தையே!
அங்கு மிங்கு மலைய விடாதினி
இங்கெ னுள்ளத் திருந்தெனை யாண்டுகொள்! உ

அறிவு றுத்து முனதரு ளின்றியான்
சிறகி ழந்த சிறுகிளி யாகினேன்
மறலி யஞ்சுமுன் மாணடி பற்றினேன்
இறைவ, வேறெனக் கோர்கதி யில்லையே. ௩

உன்பர மெனும் உண்மை யறிந்தபின்
என்பர மென் றெனைத்தையுஞ் செய்கிலேன்
தன்ப ரஞ்சுட ராகிய சக்தியால்
இம்பரா யிருந்தா யியல் பாகவே! ச

ஆட்டி வைத்திடின் ஆடுவ தல்லது
நாட்டி லேபணி நான்செய வல்லனோ?
காட்டு கின்றதைக் கண்டுன் கதிரினால்
மீட்டு கின்றனன் மின்னுயிர் யாழிலே. ரு

## அன்புறுதி

மருள்செய் மாய மயக்கினைச் சுட்டபின்
இருள்செய் தீவினை யின்னு மிருக்குமோ?
பொருள்செய் போகமும் புல்லிய தென்னவே
அருள்செய் யற்புதங் காட்டு மரசனே! ௬

துன்ப மெத்தனை தோன்றினு முன்னடி
நம்பி னோர்க்கு நலிவொன்று மில்லையே;
அன்பி னாலுன் அருளினைத் தேடினேன்
இன்ப மாகுமென் னுள்ளத் திறைவனே! ௭

வாய்மை யோங்கி வளர்கவென் வாக்கிலே
தூய்மை யோங்கித் துலங்குக நெஞ்சிலே
நேய மோங்கி நிலவுக வாழ்விலே
கோயி லாக வுடலினைக் கொண்டவா! ௮



## உயி. குக மந்திரம்

கதிநீ, மதிநீ, கதிர்வேல் முருகா!
துதிசெய் யடியார் துணைநீ, அரசே!
விதிசெய் வினையும் விலகப் புரிவாய்,
புதிதா கியவாழ் வருள்புங் கவனே! க

சத்திக் கனலே! சமர்செய் பகையைக்
குத்திக் குமுறும் கொதிவேற் கரனே!
தொத்தித் துயர்செய் பிணியைக் களைவாய்
பத்தர்க் கருளும் பரமன் மகனே! உ

உன்பால் மயல்கொண் டுருகும் உளமே
நின்பொன் னுருவை நிலைநாட்டி நிதம்
அன்பா கியபுத் தலர்தூ வுகிறேன்;
என்பா லிளகா யிளவேல் முருகா! ௩

பொறியின் வழிபுக் கிடர்செய் மனமுன்
அறிவின் வழிசென் றிடநீ யருளாய்!
மறவா மனமும், கரவா வுளமும்
இறவா நெறியும் தருவாய் இறைவா! ச

பவபந் தனைசிந் துகபற் றொழிக!
தவசா தனைசித் திகழைத் தொளிர்க!
கவலை கதிர்முன் பனிபோ லொழிக!
சிவஷண் முக ஓம்! செறுவேல் முருகா! ரு

## அன்புறுதி

தெரியா தெனுளந் திகழுஞ் சுடராய்
அரியா தனங்கொண் டுளவுன் னருளைப்
பிரியா துணரும் பெருமை தருவாய்
பெரிதாம் பொருள்பே சியபா லகனே! ௬

அருளார் முகமும், அடியார்க் கபயம்
தருபொற் கரமும், தணலார் விழியும்,
கருணைப் பொலிவும், கனிவாய் நகையும்,
திருமார் பழகுந் திகழும் முருகா! ௭

அன்பர்க் கெளிதாய் வருவாய் அபயம்!
நம்பன் உமைநா தனருட் கனலே!
உன்பா தமெனெஞ் சினிலுன் றிடவே
என்பால் வருவாய் குருவா யிறைவா! ௮

சிதையா துதியா னம்நிலைத் திடவே,
பதையா துமனம் பணிவா கிடவே,
இதயத் திலெழுந் துபொலிந் திடுவாய்,
உதயக் கதிர்போல் ஒளியார் முருகா! ௯

தாயிற் பெரிதான தயா பரனே,
நேயர்க் குபசாந்த நிகே தனனே!
காயத்திரியின் கருவே, குகஓம்
தேயச் சுடரே சிவஷண் முகனே! ௰

## உக. பரம்பொருள் தியானம்

இரவும் பகலும் இதயத் துணையே
பரவும் அறிவும் பணியுந் தருவாய்,
புரியுந் தொழில்யா வையும்பூ சனையாய்ப்
புரியும் படிசெய் பரிபூ ரணமே! க

எதுவென் றெதிர்நின் றுரையா வியல்பே
அதுவென் றறிவோர் அறியும் அறிவே,
இதுவென் றிதயத் திலகுங் கனலே,
பொதுநின் றருளாற் பொலியும் பொருளே! உ

பண்ணின் னொலியே, பரிதிக் கொளியே,
கண்ணின் மணியே, கனியின் சுவையே,
மண்ணின் வளமே, மலரின் மணமே,
விண்ணின் விரிவே, யறிவின் விளைவே! ௩

ஒளிவான் வளைமன் னுலகின் வடிவே,
வளிவீ ணைவளர்ந் திடுமந் திரமே,
தெளிவா யெனுளே தெரியும் படியே
எளிவந் தெனையாண் டதயா நிதியே! ௪



## உஉ. இன்பச் சிலிர்ப்பு

கரை கடந்து களித்ததென் னுள்ளமே,
கட்டு டைந்ததென் காவிய வெள்ளமே,
உரை கடந்ததென் அன்பின் உருக்கமே,
உலகை யாக்கிடு மோனப் பெருக்கமே!
வரை கடந்து வருந்தினன் காதலா!
"வா,வுள் ளே"யென வான்குழ லாதினை;
திரை கடைந்தெழு தேவர் அமுதெனத்
தித்தித் தாவி சிலிர்த்தது நாதனே! க

இன்ன லுற்றினி யெவ்வித முய்குவேன்?
"இறைவ னேயபயம்" எனக் கூவினேன்,
மின்ன ணிக்கர மீந்துயர் சாந்தவின்
மீது யர்த்தினை ஆதிப் பரமனே!
அன்னை போலிவ் வனுதைக் குழந்தையை
ஆத ரித்தனை, யன்பு துளிர்த்திடும்
புன்ன கைமுகங் காட்டியென் புண்ணெலாம்
போக்கி னையினி தாக்கினை வாழ்க்கையை! உ

காண நாளுங் கவலைகொண் டேங்கினேன்,
கண்ணை மூடிச்சற் றூடித் திறந்தனை;
மாணு லகம னையிலுன் னுடலே
வளரக் கண்டு மகிழ்ந்து வியந்தனன்.
ஆணவப் பெரு மாயை யடங்கலும்
அனைத்தும் நீயென் றறியத் தொடங்கினேன்.
வீணை யாகவென் வாழ்வினை மீட்டினை,
வேனிற் சோலைக் குயில்களின் பாட்டெனு! ௩

## இன்பச் சிலிர்ப்பு

புல்லனேன் உனக் கீந்ததிப் பொய்யுடல்,—
புழுத்த நாயும் புகாப்பழம் பாழ்மடம்
தொல்லை யாசைப் பசிதொளை தோற்குடம்—
தூயனே, யதைத் தொட்டுப்பொன் னாக்கினை!
எல்லை யற்றவுன் னின்ப வளத்தினால்
எளிமை தீர்த்தனை! என்னிகர் செல்வர்யார்?
கல்லைக் கற்கண்டுக் கட்டியென் றாக்கினை,
கசந்த வாழ்விற் கனிரசங் காட்டினை! ௪

ஒன்று மற்றெனை யுன்னடி யூற்றினேன்;
ஊறு வானமு தூற்றென மாற்றினாய்,
கன்றி னுக்குருகு குப்பசு வென்னவென்
கவலை தீர்க்கக் கருதினை யண்ணலே!
தொன்று தொட்ட களிம்பறுத் தென்கனல்
தொட்டதுந் † தோடு கல்லேனச் செய்தனை,
வென்ற தூய மனமெனும் வீணையில்
விசுவ மங்கள லீலையை மீட்டினை! ௫

பாச மெல்லாம் பகவநின் பால்வைத்தேன்;
பரம சாந்தச் சுகநிலை பாலித்தாய்;
ஊச லாடிடுஞ் சித்தத்தை யுன்னடி
யூன்றி னேனதி லூன்றிநீ யாடினாய்;
நேசனே யுன்னைக் கூடி யிருக்கையில்
நீள்யுகம் இமை நேரமென் றேகுதே!
பூசை மாமல ராக்கியென் போதெல்லாம்
புண்ணியா வுன்றன் பொன்னடி தூவினேன்! ௬

---

† பரிசவேதி

## அன்புறுதீ

கான லோடுங் கடுஞ்சுர வெய்யமண்
    கண்குளிர் பசுங் காவெனச் செய்குவை;
வானும் பூவு மணாளனும் பெண்ணும்போல்
    வாழ வைத்துப் புதுமர பாக்குவை;
மானி டரை யமரராய் மாற்றுவாய்,
    மழையைப் போல வரங்கள் வழங்குவாய்;
ஏனுன் னையுல கோரினுங் காண்கிலர்
    இதயங் தோறு மிருக்கு மிறைவனே! எ

கண்கொட் டாதெனைக் காணும ணாளனே,
    காணு லகுன்கு ணலையக் காட்சியே,
எண்ணி லாவுயி ரான ஒருவனே,
    எல்லை யற்றொளி வீசு மிரவியே,
அண்ண லப்பனென் னன்னை யருந்துணை
    அரசன் சோதி யருட்குரு யாவுநீ!
விண்ண ருவி யெனவினை மாகவி
    வேந்த, உன்ஜய பேரிகை யாகுக! அ

சிந்தை செய்திடச் சித்தங் குளிருதே;
    திருவ டிமல ரிற்சிரம் வைத்துனை
வந்தனை செய்ய வானருள் கொட்டுதே;
    வரத ராஜ, மணிக்காம் பட்டதும்
பந்த பாசப் படர்வினை பட்டதே,
    பழைய தொல்லை பளிச்சென விட்டதே,
எந்தையே, பர சக்தி யிறைவனே,
    என்னை யாளருட் சோதி யரசனே! கூ

## இன்பச் சிலிர்ப்பு

உன்பர மெனும் உண்மை விளைந்ததும்,
உன்னின் வேறில்லை யென்னத் தெளிந்ததும்,
என்பர மென் றெதுவுமிங் கில்லையே;
என்னை யாட்டும் விசையுன திச்சையே!
பம்பரஞ் சுழல் பாருக்குச் சாட்டைநீ,
பரிதி போன்றொரு பற்றறு சாட்சிநீ!
உம்பர் காணும் உடுக்கணம் யாவையும்
உன்ம ணிச்சுட ரின்னுதிர் பூக்களே! ய

ஆட்டி னானுன் மனப்படி யாடுவேன்;
அடங்கென் றூற்பெட்டிப் பாம்பென் றடங்கு
காட்டி னானை யெங்கிலுங் காணுவேன்; [வேன்;
கண்ணை மூடிற் கலந்துட் குவிகுவேன்;
வாட்டி னாலன்பைத் தீட்டும் வகையென்பேன்;
மண் செழிக்கும் மழையென வான்சுதை
ஊட்டி னால்அம ரானந்த மோங்குவேன்
யோகத் தாலென் னுயிரிற் கலந்தவா! கக

வளர்ந் தழகு மணந்திடு மென்மலர்
வாடி மங்கி யழிகுது நாளையே.
கிளர்ந் திரவினைக் கேலிசெய் மின்னலோ
கெடிகை யிற்பளிச் சென்று மறைகுது;
அளந்த மானிட வாழ்வெனும் பாலத்தை
அதிவி ரைவில் உயிர்நதி தாவுது
விளைந்து சோருது வாலிபத் தெம்பெலாம்
மாறித் தேயுது மாந்தரின் காதலே! கஉ

சக்தி யேசத மாவதுன் சிற்பரா
சக்தி யேசக மாவது; வாழ்வெலாம்
சக்தி யின்விளை யாடல்; உயிர்க்குலம்
சக்தி யன்னை யுயிர்ப்பெனச் சாற்றுவோம்!
சக்தி யல்லது சாதனை யுள்ளதோ?
சக்தி யல்லது சித்தியொன் றுள்ளதோ?
சக்தி பாதி விளங்கும் சதாசிவ
சங்க ராசர ணம்குரு தேவனே! கசு

சிவிகை யேறி நிதித்திரள் கொண்டிங்கே
சீர்த்தி மன்னருன் சேவடித் தொண்டிற்கே
குவிகை யோடு குழுமி வருகின்றார்—
கொழுந்தா வீசருள் வீரத் திருவினர்
நவமணிப் புலவர் நலம் பாடினார்—
நவ்விள முலைச் செவ்விய ராடினார்—
கவிதை கொண்டுன் கழலிணை போற்றினேன்,
கடைக்கண் பாரெனைக் கண்கண்ட தெய்வமே!

உன்றன் வான்புகழ் வான மளாவுக!
உலகெலாம் உன தாட்சி பரவுக!
பொன்றி ராக்ஷஸ மாயையுன் புண்ணிய
போக யோகத் திருநெறி யோங்குக!
இன்றெ ழுக புதுயுகச் செங்கதிர்
இன்னு யிர்க்குல முன்னரு ளொன்றுக!
ஒன்றுநீ பல வாகிய வுண்மையை
ஓதி வெற்றி முரச மதிர்கவே! கரு

## உ௫. முனிவர் பெருமை

எனதியான் என்னும் ஆசையை அடக்கி
இருவிகற் பற்றவர் யாவர்
தனதன வாழ்வின் சாம்பலைக் கண்டிச்
சகவியல் பறிந்தவர் யாவர்,
மனதினை வென்ற மாசிலார் யாவர்,
மட்சுகப் பற்றிலார் யாவர்,
எனதிரு கரத்தால் அவரடி பிடித்தே
இறைஞ்சலின் இன்பமொன் றுளதோ? க

பிறந்தவர் யாரும், பிணி, துயர், மூப்பின்
பிடிப்பினில் வாழ்ந்துமண் ணாகும்
இறந்தனை யறிந்தே நித்திய மான
சிவந்தனை நாடியே, அனைத்துந்
துறந்தவர் யாவர், திருவரு ளுக்கே
தொண்டுசெ யன்பர்கள் யாவர்.
சிறந்தவர் அவரே; அவர்திரு வடியின்
சிந்தையென் ஆனந்த மாமே. உ

துங்கமா முத்தி முடிமிசை துலங்கும்
துரியசி வானந்தர் வாழ்க!
மங்கல ஞான விளக்கென வளரும்
மாசிலாப் புண்ணியர் வாழ்க!
எங்குமோ தெய்வத் திருவருட் பெருமை
யிலக்கிடுந் தொண்டர்கள் வாழ்க
பொங்குயர் சுத்த சமரஸ ரான
பூரணர் வாழிய மாதோ! ௩

## உச. மௌன சாதனம்

தாயே யெனதன்புத் தந்தையே யுன்னைச் சரண்புகுந்தேன்.
பேயே யெனத்திரி நெஞ்சையுன் அன்பிற் பிடித்தடக்காய்.
நோயே தருமவ தூறுகள் மிக்க நுவலுகின்ற
வாயே யடங்கவோர் மந்திரப் பூட்டு வழங்குவையே! க

தண்ணார் கருமுகி லேயுனைத் தஞ்சம் புகுந்தொழிந்தேன்.
பண்ணார் துதிகளைப் பாடியுன் பாதம் பணிவதல்லால்
எண்ணு மெழுத்தா லுரையாலும் வேறெவ் விதத்தினாலும்
மண்ணார் வழக்குகள் பேசாதென் வாயை யடக்குவையே உ.

கோளும் பொறாமையும் குத்திரப் பொய்யொடு நாத்திகமும்
நாளும் புகன்று தடிப்பேறி, நஞ்சு தடவியதோர்
வாளும் புரியா வடுக்களைச் செய்து, மனங்கலக்கும்
வேலின் கணையினும் வேந்நாக் கொழுப்பை யிறக்குவையே!ங

ஊரார் வினைகளைப் பேசியே போதை யுதறுகின்ற,
போரார் பறையினும் பொல்லாத நாவைப் புறஞ்செலாது.
பேரார் திருப்புகழ் பேசவும் பாடிக் களித்திடவும்
சீரார் அருள்வாக்கு நல்குவாய் தெய்வ சிகாமணியே! ச

கண்டதைப் பேசிக் கலாம்விளை நாவைக் கடிந்துனடித்
தொண்டரைப் பேசித் துதித்துனை வாழ்த்தி வணங்கிடவே
வண்டறை நாண்மலர் போலவென் வாயும் மலரவருள்
கொண்டெனை யாண்டுண்மை மௌன மளித்த குருமணியே.



## உரு, மனவுறுதி

மொத்துதிரைக் கடலினிலே முனைத்தசிறு கலம்போல்,
முமமாயச் சங்கடத்தில் இம்மாய மனமே;
எத்துறையும் காணுமல் இங்குமங்குஞ் சுழன்றே
ஏங்குதையே கவலைமிக வோங்குதையே நாளும்:
சித்துருவங் காட்டிப்பரி சுத்தவொளி கூட்டிச்
சிதையாதுன் மலரடியிற் சிந்தனையை நாட்டி
மத்துகடை தயிரெனவே யலைமதியை நிறுத்தி
மனவுறுதி தந்தருள்வா யெனதிதயப் பொருளே! க

உனை நினைந்தேன் பணிந்துநிதம் உன்னருளால் உயிர்த்தேன்;
உன்பணியே யென்பணியென் றுள்வணங்கிப் புரிந்தேன்;
எனைமறந்தேன், அகந்துறந்தேன் எல்லாமுன் பரமே [லேன்
என்றடைந்தேன்; என்னாசே; எனதெனவொன் றில்
தனையடைந்தார் தாரகமே, சாசுவதச் சுகமே,
தாய்தந்தை தமர்சுற்றம் சத்குருநீ; இன்ப
மனையுனது திருவடியே; மகிழ்ந்ததனில் ஊன்ற
மனவுறுதி தந்தருள்வாய் எனதிதயப் பொருளே! உ



## உசு. சுத்தான்ம வாழ்க்கை

வீதியெய்லாம் கலைவிளங்க, விரிந்தறிவு பரவ
வெவ்விருளும் வேற்றுமையும், விரைவினிலே மறைய
தீதிரிய நலம்வளரச் சிறுமை யெல்லாந் தேயத்
திரைவிலகி மாந்தரெலாந் தெய்வவொளி காண,
நீதிவளர் சன்மார்க்கம் வீடுதொறும் நிலவ
நேர்மையுள்ள வாழ்வினிலே நிறையின்பம் பொலிய
ஆதியரு ளாட்சியொன்றே யகிலமெல்லாம் பரவி
ஆத்மசுதந் தரவெளியில் அன்பரெல்லாம் வாழ்வோம். க

பொய்யடிமை போயொழியப் போர்வெறிக ளொழியப்
புன்செயல்கள் ஒழிந்திடவே புண்ணியங்கள் பொலிய
மெய்யறிவுத் திறம்விளங்கச் சிவஞானந் துலங்க
வெருவுமதச் சண்டையெல்லாம் வேருடனே வீழத்
தெய்வகுலம் பூமியிலே திருவோங்கிச் செழிக்கத்
தேடரிய சித்தியெலாம் நாடிநம்மைச் சேரத்
துய்யசம ரஸவெளியிற் சோதியடி யார்கள்
சுத்தான்ம நேயர்களாய் நித்தியமும் வாழ்வோம் உ



## உஎ. அருளிபன்ம்

புள்ளுலவுஞ் சோலையிலே பூமணக்கும் காற்றில்,
பொற்கனிகள் உண்டியற்கை யற்புதத்திற் கூடி
எள்ளுமொரு கவலையின்றி யெண்ணமெலாந் துறந்தே
எல்லாமாய் நிற்குமுன்னை யெண்ணுவதே யின்பம்! க

உள்ளுருகி உயிருருகி, ஊனுருகிச் சித்தம்
உள்ளடங்கி உரையடங்கி உன்னுணர்வி லூன்றுந்
தெள்ளறிவா லெய்துமந்தத் திருவருட்பே ரின்பம்
தெவிட்டாம லெனக்கருள்வாய் சின்மயனே சரணம்! உ

பளபளக்குஞ் சுவடிகளைப் படித்துநித மலுத்தேன்
பரமபதக் கதைகளெல்லாம் பார்த்துமனஞ் சலித்தேன்.
வளவளக்கும் வார்த்தைமிகப் பேசியேநாட் கழித்தேன்
வாயடங்கி மனமடங்கி வாழவினி யெழுந்தேன். ௩

அளவரிய கடல்போலே அன்புமய மாகி
அன்பெல்லாம் உன்னடிக்கே யபிஷேக மாக்கி,
உளமறிய வுனைக்கலக்கும் உறுதியதை யருளாய்
உண்மையறி வின்மயப் புண்ணியனே சரணம். ௪



## உ௪. அமரக்கனல்

நன்னெஞ் சமலர் மிசை'நான்' எனவாழ்
அன்னத் திருவே யமைதிச் சுடரே
மின்னு யிரமொத் தமிளிர் நகையே
இன்னு ரமுதே யெனதா ருயிரே! க

கெடல்வேண் டுமென்கீழ் மையகந் தையிருள்
விடல்வேண் டும்விகா ரவினைக் குலமே
உடல்கொண் டுனையொன் றிடவேண்டு முளக்
கடல்கண் டுகளித் திடுவான் மதியே' உ

எங்கும் உனையன் றியிலை யெதுவும்;
அங்கந் தொறுநீ யமரக் கனலாய்ப்
பொங்கப் பொலியும் புனிதர்க் கெதுவே
பங்கம் பயமின் னல்பயப் பதுவே! ௩

பிறவிப் பிணிசெற் றிடவேண் டுமெனின்,
வெறிகொள் வினைவேட் கைவிடுத் திடுவாய்;
பொறிவா யிலடைத் துபுறங் கருதா
தறிவா யிருவென் றகவுங் குயிலே. ச

பெண்ணு ணெனவிங் குபிறந் துழலும்
எண்ணு னுயிருள் ளுயிரே யுணர்வே,
பண்கோடி பராவு பரஞ் சுடரே
கண்கோ டிகளுக் கொருவான் கதிரே!

முத்திக் கினியென் முயல்வேன் பரமா!
தித்தித் தெனுளஞ் செழிசிற்சுகமே;
பத்திக் கனல்பற் றியுன்பற் றுவிடேன்
சத்திக் கனலே சரணம் சரணம்!

## உகூ. அருட்பணி

எலேயில்லா வுலகையருட் கோயி லென்போம்
எவ்வுயிரு மெம்முயிரென் றினிதே செய்வோம்
தொல்லேசெயுஞ் சாதிமதச் சார்பை நீப்போம்
சுத்தான்மப் பொதுவினிலே யொத்து வாழ்வோம்
அல்லலிலே, அச்சமிலே, அடிமை யில்லே
'யாமார்க்குங் குடியல்லோம்' என்றுரைப்போம்.
நல்லதிருத் தொண்டரெலாம் வாரீ ரிங்கே;
நம்பெருமான் பணிசெய்ய நாடு வோமால். க

உடலிளமை பெறநாளும் உறுதி செய்வோம்;
ஊனுறக்க முறைகாப்போம்; உண்மை காப்போம்;
அடலரிய புலன்களே நாம் அடக்கி வெல்வோம்;
அறவழியைப் போற்றிடுவோம் ஆவிபோலே;
திடவுறுதி கொண்டுலகம் சேர்ந்து வாழத்
தெள்ளியசன் மார்க்கநிலே செழிக்கச் செய்வோம்
கடலருந்தி வான்பொழியுங் கருணேபோலக்
காசினியி லுண்டுதிருத் தொண்டு செய்வோம். உ

கரவின்றி இரவின்றிக் கடமை காப்போம்;
கண்போலக் காத்திடுவோம் கருணே யன்பை;
பரிவுடனே எளியவர்க்குப் பகுத்தூ ணீவோம்;
பஞ்சமறத் தொழில் வளர்ப்போம் பாரிலெங்கும்
'அரசனிலே, ஆண்டியிலே நிகரெல் லாரும்,
அருளான்ம நேயர்களாய் வாழ்வோ' மென்போம்
பரமனடி மலரல்லாற் பற்றென் றில்லோம்;
பணியெல்லாம் பூசனேயாய்ப் பரவுவோமால். ௩

## அன்புறுதி.

பிழைப்பிற்குப் பஞ்சமில்லை; பெரிய வானம்
பெயுமட்டும் வளனுண்டு நிலனுமுண்டு
உழைப்புதவும் பயன்களையாம் ஒருமித் துண்போம்;
உழைக்காமல் யாருக்கும் உணவிங் கில்லை,
செழிப்புறவே நங்களையுந் தொழிலுஞ் சீரும்,
செவ்வியசன் மார்க்கவெளி சேர்ந்தெல்லாருந்
தழைப்பதற்கே தாளாண்மை செய்வோ மென்றுந்
தளராது வேளாண்மை செய்வோம் நாமே! ௪

தெளிவுடையார் சித்தத்திற் சிவம் விளங்கும்
திருத்தொண்டர் கூட்டத்திற் சிவம் விளங்கும்
அளியுடையார் அன்பினிலே சிவம் விளங்கும்
ஆன்மநே யர்களிடஞ் சிவம் விளங்கும்
ஒளியுடையார் உரையினிலே சிவம் விளங்கும்
உயிர்க் கருணை யுடையாருட் சிவம் விளங்கும்
களிவளருங் கனகசபை யுலகிற் காணும்
கருத்தினிலே சிவங்கண்ட கண்ணனார்க்கே! ரு



## ௫௰. உறுதி தாராயோ

(பல்லவி)

உறுதி தாராயோ—பரமா
வுறுதி தாராயோ—அன்பின்
உறுதி தாராயோ?

சரணங்கள்.

துள்ளு மனத்தினை யுள்ளத் தடக்க
துஷ்டப் புலனுக்குச் சூடு கொடுக்கக்
கள்ளர்சூழ் காமாதி காட்டை யெரிக்கக்
காதலைப் பூரணன் சோதியி லுய்த்திட (உறுதி)

போதி யடியினில் புத்தர் பெருமான்
பொய்யறக் கண்டதோர் மெய்யறம்பற்றித்
தீதற நன்மை செழித்தரு ளோங்கச்
சித்தம் நிலைத்துத் தியானங்கை கூடிட (உறுதி)

தீனர் பிரானெனும் ஏசு கிறிஸ்து
செப்பிய செந்தண்மை மெய்ப்பட வாழ்வில்,
ஞானப் பொறுமைச் சிலுவையைத் தாங்கி
ஞாலத்தில் வானுல காட்சியை நாட்டிட (உறுதி)

ஹீராக் குகையில் முகம்மது ஸல்லம்
இறையரு ளாலுல கின்புறப் பெற்ற
மாறுத பக்திவை ராக்கியத் தீயென்
மனத்திற் சொலித்துடல் வாழ்விற் பரவிட (உறுதி)

## அன்புறுதி.

'பாற்கட லிற்பள்ளி கொண்டது போதும்,
பாரினைக் காத்திட வாரும் விரைந்தே;
நாற்றிசை யும்தர்ம நாதச்சங் கூதும்
நாரணரே, ஹரி நாரண ரே'யென (உறுதி)

'என்முகம் பார்த்தருள்; இன்றுல கஞ்சும்
இரத்த வெறிகொள் அரக்கரை வீழ்த்தாய்
ஷண்முக னே குகனே முருகா சரண்
சக்திவேல்சக்திவேல் சக்திவே'லென்றிட (உறுதி)

வானம் பனிமலர் வார்த்து வணங்கும்
மஹாசக்தி கௌரி மலைவளர் தாயை,
ஞான மலர் தூவி நாளும் வணங்கி
நாடெலாம் வாழுவோர் நல்வரம் பெற்றிட (உறுதி)

விண்ணினைக் கொஞ்சிடும் வெள்ளி மலைமேல்
மேவும் சதாசிவ வேந்தனைக் கண்டேன்
கண்ணார நீர்மல்கிக் காதல் பெருகிக்
கனிந்து, பணிந்து கலந்து களித்திட. (உறுதி)

ஓம் சுத்த சக்தி

